# திருமணப் பாட்டு



சுவாமி சுத்தானந்த பாரதியார்

அன்பு மலர் - உக

பாமலர் - க

# திருமணப் பாட்டு



சுவாமி சுத்தானந்த பாரதியார்
இயற்றியது



**அன்பு நிலயம்**
இராமச்சந்திரபுரம்

உரிமை பதிப்புற்றது] 1940 விலை { நான்கு அணா / உ௦ காசு

# பதிப்புரை

எமது நிலயத்தின் இருபத்தொன்பதாவது அன்பு மலரை, சக்திசிவன் மலரடியில் வைத்து வணங்குகிறோம். இப்பாடல்கள் அன்பர் திருக்கலியாணங்களில் பாட வேண்டியே எம் அருளடிகளால் பாடியளிக்கப்பெற்றன. இப்பாடல்களைத் தம் செல்வி திருமதி அமிர்தவல்லியின் திருமண நாளில் அச்சிட்டு வழங்கி அரங்கேற்றிய அன்புச் செல்வர் காரைக்குடி திரு. க. ராமசாமி பிள்ளையவர்களுக்கு எமது நன்றி வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். இந்நூலில் வரும் தெய்வப் பெயர்களுக்குப் பதில் அவரவர் இஷ்ட தெய்வங்களின் பெயரைச் சேர்த்து வழங்கலாம்.

திருமணநாளில் பாடவேண்டிய கீர்த்தனங்களும் கும்மிகளும், பக்தி பரவச கீர்த்தனைகள், குழந்தையின்பம், தமிழ்க்கனல் முதலிய நூல்களில் நிரம்ப உள்ளன. திருமுறை, திருவாய்மொழிப் பாடல்களையும் பாடவேண்டும்.

ஆண் சிவம் பெண் சக்தி. இரண்டும் சேர்ந்தே உலகாடல் நடக்கிறது. ஆணின்றிப் பெண்ணில்லை ; பெண்ணின்றி ஆணில்லை. இருவரும் கதிரும் கதிரவனும் போல்வர். அந்த ஒருமைப்பாட்டை யளிப்பது திருமணம். மனித வாழ்க்கையில் மிகப்பெரிய நன்னாள் திருமண நாளேயாகும்.

'காதல் இருவர் கருத்தொருமித்து ஆதரவுபட்ட' இல்லறத்தையே தமிழர் நல்லறமாகப் போற்றினர். தகுந்த வயதும், காதலும், உள்ளொற்றுமையும், அறிவொழுக்கங்களும் பார்த்தே பெற்றோர் தம் மக்களுக்கு மணம்புரிந்தனர். அத்தகைய மணவினையை இந்நூல் விளக்குகிறது.

தோழிமாருடன் விளையாடும் கன்னியை அழகனொருவன் கண்டு காதல்கொள்ளுகிறான். அக்கன்னியும் நாணப்பார்வையால் தனது காதலைத் தெரிவிக்கிறாள். தூது நடக்கிறது. ஒருநாள் இருவரும் எதிரெதிரே கூடித் தமது உள்ளத்தை வெளிப்படையாகத் தெரிவித்து ஒருவரை யொருவர் அறிந்து கொள்ளுகின்றார். அதன் பிறகு இருவரும் பெற்றோரிடம் தமது கருத்தை வெளிப்படுத்துகின்றனர். பெண்வீட்டுக்காரரும் பிள்ளைவீட்டுக்காரரும் சம்பந்தத்திற்கு உடன்பட்டு முகூர்த்தம் வைக்கின்றனர். பாலிகை தெளித்தல், முகூர்த்தக்கால் ஊன்றல், காவணம்போடல், உற்றார் உறவினர் கற்றார் கலைவாணர்களை வரவேற்றல், ஊர் அழைத்தல் முதலிய சிறப்புக்களெல்லாம் நடைபெறுகின்றன. முகூர்த்தத்திற்கு முதனாள் மாப்பிள்ளையை அழைக்கின்றனர்.

முகூர்த்தம் தொடங்குகிறது : மணமக்களை அலங்கரித்தல், தெய்வம் வணங்கல், கடவுள் வாழ்த்துடன் இருவரையும் மணவறைக்கு அழைத்து வருதல், திருவிளக்கெடுத்தல் - இவையானதும் மந்திரச்சடங்குகள் தொடங்கும். கடவுள் வழிபாடு, சீர்சிறப்புகளையெல்லாம் கடவுளுக்கு நிவேதித்தல், கலசவழிபாடு, புண்ணியப்புனல் தெளித்தல், அமுதுண்ணல், காப்புநாண் கட்டல், நவக்கிரகபூஜை, ஓமம் வளர்த்தல், கூறை கொடுத்தல், இருவரும் புத்தாடையணிந்து தீமுன் அமர்தல், பெற்றோர் தத்தம் மக்கள் பெருமையைப் பாடல், இருபுறமும் மனவொற்றுமையுடன் தாரை வார்த்தல், பெண்ணை ஏற்றல், பிறகு மணமக்கள் சுடர் வளர்த்தல், பெரியார்கள் இல்லறமாண்பைச் சொல்லல். அவ்வாறே இல்லறம் நடத்துவதாகச் சதிபதிகள் வாக்களித்தல், கற்புறுதி கூறல், தாலிகட்டல், மாலைமாற்றல், மோதிரம் மாற்றல், அம்மி மிதித்து அருந்ததி காணல்,

அனைவரும் மணமக்களை வாழ்த்தல். ஆலத்தி யெடுத்தல், வெற்றிமுரசடித்தல்–இவற்றுடன் மந்திரச்சடங்குகள் முற்றும்.

கலியாணம் முடிந்தபிறகு சில ஆடல்பாடல்களால் மணமக்கள் இன்பமும் நேசமும் பெருகும்—மங்கலம் பாடல், தூதுபாடல், நலங்கிடல், பூப்பந்தாடல், தோட்டத்தில் மலர் கொய்தல், ஊஞ்சலாடல், ஓடம்பாடல், கும்மியடித்தல் முதலியன.

அன்று நண்பர் உறவினர் அனைவருக்கும் விருந்தளிக்கலாம்; ஏழைகளுக்கு அன்னமிடலாம். நாட்டு வளர்ச்சிக்கேற்ற நன்கொடை யளிக்கலாம், தமிழ் நூல்களை அச்சிட்டு வழங்கலாம், தமிழ்ப்பாடல்கள் பாடலாம், பாவலர் நாவலர்களுக்குப் பரிசு வழங்கலாம். இவையெல்லாம் திருமணநாளில் செய்யத்தக்க அறங்களாம்.

திருமணம் ஆனபிறகு மணமகன் வீட்டில் சிறப்பான ஆடல்பாடல்களுடன் பெண்ணை வரவேற்று உபசரிக்கவேண்டும். இத்துடன் திருமணம் முடிந்து இருவரும் ஒருமனத்தராகி இல்லறம் நடத்தவேண்டியது.

திருமண வாழ்வைப்பற்றிய இன்னும் விரிவான குறிப்புக்களை திருநூல், யோகசித்தி, திருக்குறளின்பம் ஆகிய நூல்களிற் காண்க.

இல்லறமாகிய நல்லறம் ஓங்குக!

விக்கிரமஞு,<br>வைகாசிமீ. }

அன்பு நிலயத்தார்.

# திருமணப் பாட்டு

## க. வழிபாடு

(நொண்டிச் சிந்து)

ஆதி பராபரனை—சச்சி
தானந்தமாம் பரி பூரணனை,
வேதமும் ஆகமமும்—போற்றும்
வித்தகனைப் புரு ஷோத்தமனை,
சாதிமதங் கடந்த—சுத்த
சத்திய ஸமரஸத் தத்துவனை
ஜோதி சதாசிவனை—நம்
சுபவினை ஜயம்பெறத் தொழுதிடுவோம்.

எங்கிலும் இருப்பவனை—அன்பர்
இதயத்தில் நடஞ்செயும் இரவியினை
சங்கரனை, வரனை—தந்தை
தாய்குரு வாகிய தனிமுதலை,
பொங்குயிர் மேனியனை—இந்தப்
புவியினை அருளினுற் புரப்பவனை
மங்கள நாயகனை—நம்
மணவினை நலம்பெற வணங்கிடுவோம் (ஆதி)

## உ. தலைவன் காதல்

கண்டதும் காதல்கொண்டேன்—இந்தக்
காரிகையே எனக் காருயிராம்.
விண்டமுல்லை முறுவல்—கதிர்
வேலினும் வாளினும் கூர்விழிகள்,
வண்டுமொய் மலர்க்கூந்தல்—திரு
வசித்திடும் பூரண மதிவதனம்
கொண்டென துளங்கவர்ந்தாள்—இந்தக்
குணவதி தன்னையே மணம்புரிவேன்.

பக்குவக் கன்னியிவள்—வளர்
பருவத்திற் கிசைந்தநல் உருவுடையாள்.
வக்கிர புத்தி யில்லாள்—என்
மனத்திற்குப் பிடித்தவள் மகராசி.
தக்க படிப்புடையாள்—மனைத்
தருமமுங் கருமமும் தானறிவாள்.
மிக்கவுங் கற்புடையாள்—என்
விருப்பினுக் கிணங்கிடுங் கருத்துடையாள்.

செந்தமிழ்க் குலமுடையாள்—வீர
தீரரை யளித்திடும் சீருடையாள்.
சிந்தையில் அன்புமிக்காள்—சற்றும்
சினம்செருக் கில்லாத நடையுடையாள்.
சுந்தரப் பொலிவுடையாள்—கை
தொட்டது பொன்னாகுந் தொண்டுடையாள்.
சந்ததம் இவளுடனே—வாழச்
சக்தி சதாசிவன் அருளுகவே!

## ௩. தலைவி காதல்

வராளிராகம்] [சாப்புதாளம்

("சிங்காரமாய்ப் பள்ளுப்பாடினார்" என்பதுபோல்)

தோட்டத்தில் அந்தி மலர்கொய்தே—அம்மா
தோழிகளோடு நான் ஆடினேன்—அங்கே
நாட்டத்தை வைத்தென் முகத்திலே—ஒரு
நல்லிளங் காளை எதிர்ந்தனன்—தெய்வம்
காட்டிய காதல னாமென்றே—நாணக்
கண்களால் என்மனங் கூறினேன்—இனி
வாட்டமில்லை நம் அதிட்டத்தால்—நல்ல
மாப்பிள்ளை தானாக வந்தனன்.

தோளுயர் வீரகம் பீரனே—பால
சூரியன் போன்ற முகத்தனே—மத
வேளும் வியக்கும் அழகனே—நல்ல
வித்தையும் சொத்தும் உடையவன்
ஆளுக்குத் தக்க சமர்த்தனே—நெஞ்சில்
அன்புமிகக் கொண்டான் என்னிடம்.
கேளுக்குத் தக்க குணாலயன்—பெருங்
கீர்த்திக் குகந்த தருமவான்.

பெண்ணின் பெருமைகள் பேசுவான்—அவன்
பேச்சும் செயலுமொன் றானவன்.
கண்ணிரண் டென்னநாம் வாழுவோம்—என்றே
காட்டினான் ஜாடை கனிவுடன்—முன்னே
பண்ணிய பூஜா பலத்தினால்—இந்தப்
பாக்கியம் வந்து பழுத்ததே—அந்தப்
புண்ணியன் என்னுயிர் போன்றவன்—இனிப்
போகாதென் சித்தம் பிறரிடம்.

## ௬. பெற்றோர் மகிழ்ச்சி

(நொண்டிச் சிந்து)

பெண் வீட்டார்

தெய்வ சகாயத்தினுல்—இன்று
  தேடரும் சம்பந்தம் கூடியதே.
தையலுக் கேற்றவரன்—நல்ல
  தரையுடன் பயிரும்போல் வாழியவே!
செய்திடும் சீர் செனத்தி—தம்மைத்
  திருத்தியாய் ஏற்றெம்மைச் சிறப்பியுங்கள்.
வையகம் உள்ளமட்டும்—நம்
  மரபிசை யோங்குக வான்மரம்போல்.

பிள்ளைவீட்டார்

நல்லபெண் கிடைத்ததம்மா—இந்த
  நாட்டுப்பெண் கிடைத்ததெந் தவப்பயனே
கல்வியிற் கலைமகளே—எங்கள்
  கனதன மனைக்கிவள் இலக்குமியே.
எல்லாருமே மகிழ்ந்தோம்—தக்க
  இடத்தினிற் சம்பந்தம் கிடைத்ததம்மா.
சொல்லுவ தென்இனிமேல்—ஒரு
  சுபதினங் கலியாணந் தொடங்கிடுவோம்.

## ரு. திருமண நாட்சிறப்பு

**மோகனராகம்]** [அடதாளசாப்பு

("கலியாணபேரிகை" மெட்டு)

ஓம்சிவம், ஓம்சுபம், ஓம் ஜயம்—என்றே
ஓதிநன் னாளைத் தொடங்குவோம்.
தீம்பால் அமுதச் சுவையெனஅ—நல்ல
தேன்றமி ழின்னிசை பாடுவோம். (ஓம்)

இல்லுடன் சுற்றமுந் தோழரும்—புகழ்
எய்கலை வாணரும் பாணரும்
எல்லாரும் கூடி வருகெனஅ—எங்கும்
இன்மண ஓலையைப் போக்குவோம். (ஓம்)

செல்வமும் செல்வரும் சீர்த்தியும்—ஓங்கித்
தெய்வத் திருவருள் கூடியே
பல்லாண்டு காதலர் வாழ்கெனஅ—வளர்
பாலிகையில் முளை தூவுவோம். (ஓம்)

மங்கல பேரி முழங்குவோம்—மேள
வாத்திய நாதம் வழங்குவோம்.
நங்குலம் நீடுழி வாழ்கெனஅ—நாம்
நாட்டுவோம் பாட்டுடன் மூர்த்தக்கால். (ஓம்)

சுந்தர வாழையுந் தாழையும்—பசுந்
தோரமும் ஆரமும் சேலையும்—கட்டிப்
பந்தல் அலங்காரம் செய்குவோம்—ஊஞ்சற்
பலகையைக் கால்நட்டுப் போடுவோம். (ஓம்)

மங்கல மணவறை கட்டுவோம்—செம்
மண்ணுடன் சுண்ணமும் பூசுவோம்.

சிங்காரச் சித்திரம் தீட்டுவோம்—நல்ல
செந்தமிழ் வாக்குகள் கோட்டுவோம். (ஓம்)

போத குருவை வணங்குவோம்—பரி
பூரண ரின்புகழ் பாடுவோம்.
மாதா பராசக்தி ஓம்என—சுப
மங்கலிப் பெண்களைப் போற்றுவோம். (ஓம்)

பாவலர் நாவலர் பாடகர்—நாட்டின்
பற்பல நற்கலை வாணர்கள்
மேவிடக் கண்டுள்ளம் பூரிப்போம்—மிக
விமரிசை யாகஆ ராதிப்போம். (ஓம்)

சந்தனங் குங்குமம் தாம்பூலம்—கண்டு
சர்க்கரை வைத்துக் 'கனிவுடன்
வந்து கல்யாணத்தை வாழ்த்துங்கள்!'—என்று
வாயார ஊரை வரவேற்போம். (ஓம்)

அன்னமும் கிள்ளையும் தோகையும்—போலே
அட்டமங் கலங்கள் ஏந்தியே
மின்னிடை மாதர் அணிகளும்—வீர
விஜயர்போல் ஆடவர் கூட்டமும்,
நாத ஸ்வரங்கள் முழங்கவே—எங்கும்
நண்பகல் போலொளி காந்தவே,
வேதத் தமிழிசை யோங்கவே—உடன்
விதவிதச் சீர்கள் வருகவே,
மன்னருக் கேற்ற சிறப்புடன்—நம்
மாப்பிள்ளையை அழைப் போமிங்கே—இளங்
கன்னி யின்பக்கம் கணவனைக்—கண்டு
கண்குளிர் வோம்உல கோரெல்லாம்! (ஓம்)

## சூ. மணவறை வாழ்த்து

(பண்—தில்லைவாழ் அந்தணர்)

சிவகௌரி, கணபதி, திருமாலின் அருளால்
சுபமோங்கி, வதுவரர், சுடரோங்கி வாழ்க! (சிவ)
வள்ளி மணாளனும் வடிவேலன் அருளால்
உள்ளொன்றிக் காதலர் உலகோங்கப் பொலிக! (சிவ)
பகலுடன் கதிரும்போல் பாலுடன் சுவைபோல்
இகபர சுகமெய்தி இருவரும் வாழ்க! (சிவ)
அன்பறம் பொரு ளின்பம், அழகின்ப மோங்கி,
நன்மக்கள் புகழோங்க நாளோங்கி மகிழ்க! (சிவ)
தேகமும் தேகியும்போல் சேர்ந்திவ ருலகில்
போகமும் யோகமும் பொருந்திநீடு வாழ்க! (சிவ)

## எ. திருவிளக் கெடுத்தல்

புன்னாகவராளி] [ஆதிதாளம்

திருவிளக் கேற்றிடு வோம்—ஞானச்
செங்கதிர் பொலிந்திடவே....
அருளொளி நிரம்பிடவே—நம்
அன்பிறை வன் பெயரால் (திரு)
தங்க விளக் கெடுப்போம்—சுத்த
சக்தி ஜயம் எனவே!
மங்கலம் பொங்கு கவே—நல்ல
மனையறம் ஓங்கு கவே.... (திரு)
சுபமணி விளக்கெடுப் போம்—தெய்வச்
சுடர்மணிக் கதிர் பரவ....
நவமணி மண்ட பத்தில்—விளக்கும்
நல்லிளங் காத லர்க்கே (திரு)
புதுப்புப் பொலி வுடனே—இன்பப்
பொதுநடத் தரசரு ளால்,
வதுவரர் வாழி யவே—இந்த
வானிலம் வாழி யவே! (திரு)

## அ. திருமண மந்திரங்கள், வழிபாடு

ஓம் சிவம், ஓம் சுபம், ஓம் ஜயம் என்றே
உத்தமக் கடனை இத்தினம் புரிவாம்.
சித்தி கணபதி சீர்த்தி யருள்கவே!
சக்தி மஹேசன், சத்குரு நாதன்,
அன்பர்க்கெல்லாம் இன்பம் அருள்கவே!
துன்ப மொழிக! துலங்குக நலனே....
திருமண வேள்வி திகழுக வெற்றியே
நறுமலர் தூவி நாம்வழி படுவோம்.

[மணாளர் வழிபடல்]

## ஆ. நிவேதனம்

மணவறை தன்னை அணிசெயும் அனைத்தும்—
மஞ்சட் குங்குமம் மலர்கனி, சந்தனம்,
வெற்றிலை பாக்கு, விதவித வாசம்,
தீம்பால் நெய்தயிர் தேங்காய் கனிவகை,
* ஒன்பது தானியம் † ஒன்பது சமித்து,
பொன்சுடர் விளக்கு, பூரண கும்பம்,
பட்சண வகைகள், பாத்திர வகைகள்,
அணிமணி வகைகள், அரும்பொன் வெள்ளி,
நினக்கே அனைத்தும் நிவேதன மாகுக!
எங்கள் உடலுயிர் எல்லாம் உனக்கே!
ஏற்றருள் வெற்றி ஈந்தருள் இறைவா!

---

* ஒன்பது தானியம்: கோதுமை, நெல், துவரை, பயறு, கடலை, மொச்சை, எள், உழுந்து, கொள்ளு—இவை முறையே சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, இராகு, கேதுக்களைக் குறிக்கும். இவற்றை ஒன்பது தொன்னைகளில் வைத்து நவக்கிரகங்களுக்கும் நிவேதிக்க!

† ஒன்பது சமித்து: எருக்கு, புரசு, கருங்காலி, நாயுருவி, அரசு, அத்தி, வன்னி, அறுகு, தருப்பை—இவையும் மேற்சொன்ன கிரகங்களைக் குறிக்கும். ஓமத்தீயில் வழங்குக!

## கo. புண்ணிய நீர் தெளித்தல்

(கலச பூஜை)

[ஒரு பெரிய இலையில் தாமரைப் பூவட்டம்போல அரிசியைப் பரப்பி, நடுவே நீர்க்கலசம் வைத்து, அதன்மேல் புதிய மாவிலைக்கொத்து வைத்து, அதன்மேல் மஞ்சள் தடவிய தேங்காயை வைத்துச் சந்தனம் குங்குமம் இடுக. சக்தியருளால் தழைத்த வாழ்க்கை, சிவத்திற்குப் பணிந்து நிற்கவேண்டும்; இதய கமலத்தில் திருவருளை நினைக்க வேண்டும். இதுவே அன்னமயத்தை ஆதாரமாகக் கொண்ட உலகவாழ்க்கையின் பயன் என்பதே இக்கலச பூசையின் பொருளாம். அதில் உள்ள நீர் புண்ணியநதிகளின் புனலாவதாகப்பாவனை செய்க!]

உலகைக் குறிக்கவே இலையை விரிப்போம்
யாக்கையை வளர்க்கும் அரிசி பரப்புவோம்
இதயங் குறிக்கப் பதுமம் செய்வோம்
அதன்மேற் கலசமாம் அருளை நாட்டுவோம்
மங்கல வாழ்வாம் மாங்கொத் திடுவோம்
சிவத்தைக் குறிக்கும் தேங்காய் வைப்போம்
சந்தனம் குங்குமம் சாற்றித் தொழுவோம்
கங்கை யமுனை காவிரி கிருட்டினை
சிந்துகோ தாவரி நருமதை சேர்ந்த
புண்ணியப் புனல்போல் பொங்குந் திருவருள்,
மனமுயி ருடலின் மாசை நீக்கி
வாழ்வுப் பயிரை வளமுறுத்துகவே,
புனிதன் பெயர்சொலிப் புண்ணிய நீரைத்
தெளிப்போம், அருளிற் குளிப்போம் யாமே!

## கக. அமுத முண்ணல்

பாலில் வெண்ணெய்போல் வெண்ணெயில் நெய்போல்
உயிர்தோறும் கலந்த ஒருவனைக் கருதுவோம்
அவனரு ளாகும் அமுத முண்ணுவோம்
அமுதமா குகவே அமுதமா குகவே
ஆருயிர் வாழ்க்கை அமுதமா குகவே!

[பால், வெண்ணெய், நெய், தயிர், மோர் கலந்து, திருநாமம் ஜபித்துக் குடங்கையால் உண்ணல்.]

## கஉ. காப்பு நாண் அணிதல்

அன்பே நாணாய் ஆர்வமே மஞ்சளாய்
எடுத்த காரியம் இனிதுற வேண்டி
கடவுளை எண்ணிக் காப்புநாண் அணிவோம்.

## கங. பாலிகை வணக்கம்

அறம்பொரு ளின்பம் சிறந்தரு ளோங்கி,
உயிர்வாழ் வென்னும் பயிர்வளம் பெருகி
பூவுங் கனியும் பொலிந்தெம் மரபு
கற்ப காலம் வாழ்க வென்று
ஜோதி யிறைவனைத் துதித்துப் பணிவாம்.

[இதன்பிறகு பலர் பலவகைச் சடங்குகள் செய்வர். தீக்ஷை செய்துகொள்வர் புதுப்பூணூல் மாட்டுவர், பிள்ளையார்வணக்கம், அன்னப்பிராசனம், அரசங்கொம்பு நடுதல்,

வர்ணப்பானை அடுக்கல், கூறைப்புடவை ஓதியிடல், பெண்ணும் பிள்ளையும் புத்தாடையணிந்து பெற்றோரை வழிபடுதல், காசியாத்திரை என்று தெருக்கோடிமட்டும் சென்று வருதல், தாரை வார்த்தல், கன்னிகாதனம், தாலியைப்பெரியோர் ஆசீர்வதித்தல், தாலிகட்டல் அல்லது மோதிரம் மாற்றல், மாலைமாற்றல், கண்ணுடிகாட்டல், பட்டம்கட்டல், தீயைச்சுற்றல் அம்மி மிதித்து அருந்ததி காணல், பொரியிடல், ஆலாத்தி, மாலையில் மரக்கால் வலம் வரல், ஊஞ்சல், மஞ்சள் நீராடல், ஊர்கோலம், மூளையெடுத்தல், இன்னும் எத்தனையோ சடங்குகள் உள்ளன. இங்கே முதன்மையான சிலவற்றையே விளக்கியுள்ளோம்.]

## கசு. நவக்கிரக வணக்கம்

நவக்கிர கங்களை நலமுற வணங்குவோம் :
சூரியன் அருட்பெருஞ் சோதியைப் பொழிக!
சந்திரன் மகிழ்ச்சி தந்தருள் புரிக!
செவ்வாய் வீரத் திருவெமக் கருள்க!
புதன்எம் அறிவைப் பொலிவுறத் தூண்டுக!
வீறுந் திருவும் வியாழம் அருள்கவே!
சுக்கிரன் அருள்க சுகபோ கங்கள்!
சனியெமக் கருள்க மனம்வெல் யோகம்!
இருளை விழுங்குக இராகுகே துக்கள்!
அண்டபிண் டங்களை ஆக்கி யளிக்கும்
உலக நாதன் உதவுக நலனே!

[வழிபடல்]

## ௧௫. தீவளர் பாட்டு

இராகம் செஞ்சுருட்டி] [ஏகதாளம்

ஓங்குக செஞ்சுடரே—எங்கள்
உள்ளொளி வானுயர் வெள்ளொளி யாகிட
வீங்குக விண்சுடரே—நெஞ்சில்
வீரம் பெருகிடக் கூரம்பு போற்சிகை
தாங்குக நீள்சுடரே—நிதம்
தந்தமெக் கிந்திர போகமும் யோகமும்
ஓங்குக தெய்வச்சுடர்—நிதம்
ஓம்தத்ஸத் ஓம்தத்ஸத் ஓம்தத்ஸத் ஓமென (ஓங்குக)

நெற்றிக்கு மேலுயர்ந்தே—அங்கு
நின்மல மாயொளிர் பொன்மணித் தீபம்போல்;
கொற்ற நெடுஞ்சுடரே—கருங்
கூற்றையுஞ் சாடிடும் ஆற்ற லளித்தருள்!
பெற்றவள் போலுருகி—நிதம்
பேணியெம் அன்பினைப் பூணும் புகழ்பெறும்
வெற்றி மணிச்சுடரே—அருள்
விண்ணர சையிந்த மண்மிசை நாட்டிட (ஓங்குக)

வேண்டி வணங்குகிறோம்—தெய்வ
வேட்கைகொள் உள்ளத்தில் வீறுற் றெழுந்தின்பத்
தாண்டவ மாடிடுவாய்—சொக்குத்
தங்கத் தணலுடல் எங்களுந் கீர்த்திசை
தூண்டி நடத்திடுவாய்—நாங்கள்
சுத்த சுதந்தர நித்திய வாழ்வினை
யாண்டும் பரப்பிடவே—பர
மாத்ம பலமருள் அக்கினி தேவனே! (ஓங்குக)

எண்ண முயர்த்திடுவாய்—வாக்கில்
இன்கவி பொங்குக வுன்கனல் வெள்ளம்போல் ;
கண்ணைத் திறந்திடுவாய்—உளக்
கண்ணைத் திறந்திடுவாய்—எங்கள்
காதலிலே தெய்வச் சோதி யொளிர்மனத்
திண்மை யளித்திடுவாய்—திரள்
செல்வங்கள் யாவையு நல்கிடுவாய்—அறி
வுண்மையின்பஞ் செழிக்க—நிதம்
ஓம்தத்ஸத் ஓம்தத்ஸத் ஓம்தத்ஸத் ஓமென (ஓங்குக)

## கக. கூறை கொடுத்தல்

சோபனம், சோபனம், சுபம் சுவாகஒம்!
இந்த நன்னாளில் சந்ததம் வாழ்கென
மணமக ளுக்கு மாமனார் அளித்த
மாண்புறுங் கூறை மங்கலந் தருகவே.
பாவுடன் ஊடுபோல் பதிசதி கூடி
இல்லற மான நல்லற மோங்குக!
சோபனம் சோபனம் சுபம் சுவாகஒம்.

[இந்த மந்திரத்திலேயே 3, 4 ஆம் வரிகளை "மணமக ளுக்குத் தகப்பனார் அளித்த மாண்புறுகோடி மங்கலந்தரு கவே" என்று மாற்றி மாப்பிள்ளைக்குப் புதுவேட்டி ஓதி யிடுக! இப்படியே ஓதியிடும் எல்லாப் பொருள்களுக் கும் இன்னார் இன்னது என்று பெயரைக் குறித்து இம் மந்திரத்தையே சொல்க!]

## கஎ. பெண்ணின் பெருமை

[புத்தாடையணிந்து வதுவரர் அமர்ந்ததும் பெண் வீட்டார் பாடுதல்]

இராகம் மத்திமாவதி] [ரூபகதாளம்

பல்லவி

அன்பாய் நடத்த வேண்டும்—நாங்கள் பெற்ற
ஆசை யிளங் கிளியை.

அனுபல்லவி

இன்பத்துந் துன்பத்தும் என்றென்றும் உம்முடன்
இல்லறம் வகித்திடும் நல்லறச் செல்வியை (அன்பாய்)

சரணம்

அன்ன நடையினள், மின்ன லிடையினள்,
அமுதத் திருமொழியாள் குமுதம்போல் விழியாள்.
தன்கடன் அறிந்தவள் சன்மார்க்கந் தெரிந்தவள்
தம்முடன் அனைத்திலும் சரிநிக ராகவே. (அன்பாய்)

## கஅ. பிள்ளையின் பெருமை

[பிள்ளை வீட்டுக்காரர் பாடுவது, அதே ராக தாளம்]

பல்லவி

புண்ணியன் எம் புதல்வன்—நன்மனை வியைப்
பொறுப்புடன் நடத்தி டுவான்.

அனுபல்லவி

கண்ணியவான் கல்வி கற்றுநிற்கும் கனவான்
கண்மணி போலுங்கள் பெண்மணியைக் காப்பான்
(புண்ணியன்)

சரணம்

மங்கல மனைக்கேற்ற மஹாலக்ஷ்மி நாட்டுப்பெண்
மணமகளுக் கேற்ற குணநிதி மாப்பிள்ளை
கங்கையும் யமுனையும் கலந்தின்பம் விளைந்தது
கார்கண்ட பயிர்போல பூரிப்போம் எல்லாரும்.
(புண்ணியன்)

## கசு. தாரைவார்த்தல்

[பெண்ணைப் பெற்றோர் மகள்கையை மாப்பிள்ளை யிடம் கொடுத்து]

சீரும் சிறப்பும் செய்ய ஒழுக்கமும்,
அறிவும் அறமும் அன்பும் அமைந்த
தீந்தமிழ் மரபினர் திருவுறப் பெற்ற
(குலம் பெயர் குறிக்க)

அருமைச் செல்வி........யை
(இன்ன மரபினர் இன்னாராகிய)
உங்கள் செல்வன்................க்கு
சரிநிக ரான தருமபத் தினியாய்
மங்கள மான வாழ்க்கைத் துணையாய்த்
தந்தோம் தந்தோம், தாரை வார்த்தோம்
கடவு ளருளால் காதலர் வாழ்கவே!

[பெண்ணைப்பெற்றோர் மணமகன்பெற்றோர் கையில் நீர்வார்த்துத் தருதல்.]

## உ௦. மகிழ்வுடன் ஏற்றல்

மகிழ்வுடன் ஏற்ரேம் மங்கலத் திருவை
செந்தமிழ் நாட்டின் சீரிய குடிகள்
செல்வமும் கல்வியும் செந்தண் வாழ்வும்
பொருந்திப் பொலியும் புண்ணிய குலத்தினர்
(குலம் பெயர்வகை)

எங்கள் அருந்தவம் ஈன்ற நன்மகன்
திருவளர் செல்வன்............க்கு
உங்கள் செல்வி............யை
மனதிற் கிசைந்த மனேவியாய் ஏற்ரேம்
கடவு ளருளால் காதலர் வாழ்கவே!

[மணமகள் நெற்றியில் குங்குமம் இட்டுக் கூந்தலில் பூ முடித்து ஏற்றல்.]

## உக. சுடர் வணக்கம்

[முக்கோண நடுவே எரியும் வேள்வித்தீயில் இந்த மந்திரங்களேச் சொல்லி ஒவ்வோரடிக்கும் சமித்தைப் போடுக.]

சக்திச் சுடரே சக்திச் சுடரே!
சேமம் அருளாய் சிவத்திருக் கனலே!
இதயகுண் டத்தில் எழுந்தொளிர் கனலே,
அருட்பெருங் கனலே, ஆருயிர்க் கனலே,
இருட்டினே விரட்டும் இரவிக் கனலே,
நீயே சாட்சி, நீயே காட்சி,
நின்னெளி முன்னே இன்னிய காதலர்
இல்லற விரதம் ஏற்ரேம்; காவாய்!
ஆற்றலும் ஆயுளும், அளிப்பாய் போற்றி!

அருளும் பொருளும் ஆக்குவாய் போற்றி!
துன்பந் துடைப்பாய், துயர்களை விலக்குவாய்,
அன்பைவளர்ப்பாய், அறிவைத் துலக்குவாய்,
மரபு விளங்கநன் மக்களைத் தருவாய்,
சீருஞ் சிறப்பும் செல்வமும் தருவாய்,
தானமுந் தவமும் ஞானமும் அருளாய்,
வீரமும் பலமும் தீரமும் அருளாய்,
அயரா முயற்சியும், ஆண்மையும், வெற்றியும்
ஆத்ம சக்தியும், அமைதியும் பொறுமையும்,
வாய்மையுந் தூய்மையும் வளம்பெற நல்காய்.
பூரண னந்தப் பொலிவெமக் கருளாய்,
கௌரியும் சிவனும், கந்தனும் வள்ளியும்,
கலையும் பிரமனும், கமலையும் விஷ்ணுவும்,
சோதியும் கதிரும் போலத் துலங்கும்
மங்கல வாழ்வை எங்களுக் கீவாய்!
கற்புடன் இருவரும் கண்ணுடன் மணிபோல்
ஒன்றுபட் டுய்ய உள்ளொளி காட்டாய்!
பாரெலாம் பரவிய பாவனச் சுடரே,
சீரெலா மருளுஞ் சிற்பரஞ் சுடரே,
உருத்திரக் கனலே, நிருதரை யழிக்க
முருகவே ளாக முளைத்த கனலே,
போற்றி போற்றியுன் பொலிநகை போற்றி!
ஆகுதி வழங்கி அடிபணி கின்றோம்
ஓம் சுவாக ஓம்! ஓம் சுவாக ஓம்!

## உஉ. பெரியார் இல்லறம் விளக்கல்

இல்லற மாகிய நல்லறம் பூண்டீர்,
அகில மெல்லாம் ஆண்பெண் குடித்தனம்.
மனிதன் அன்பு மனைவியைப் பொருந்தி,

மக்களாய் விரிந்து, மன்னுயிர் அளாவி
இறைவனைக் கலத்தலே இல்லறப் பயனும்.
நல்லதும் பொல்லதும் இல்லறத் துண்டு.
மனவிகா ரத்தை மாற்றி யொழுகுமின்,
சமநிலை யமைதி தந்திடும் இன்பம்.
அறவழி ஈட்டுமின், அறஞ்செய விரும்புமின்,
பெற்றூர் சுற்றம் பேணி யொழுகுமின்;
காதலும் கற்பும் தீதறக் காமின்,
பொதுநலங் காத்துப் புண்ணியம் புரிமின்,
மகப்பே றெண்ணி யுகப்பொடுங் கூடுமின்,
மற்றைப் போது மாசறப் பழகுமின்,
கடவுளை என்றும் கருத்தி லிருத்துமின் ;
அவன்வழி பாடாய் அருவினை செய்மின்,
ஒருவருக் கொருவர் உதவியா யிருமின் !
கனியும் சுவையும், கண்ணும் ஒளியும்,
மலரும் மணமும், மண்ணும் பயிரும்
போல உள்ளம் பொருந்தி நீவிர்
இல்லற மாகிய நல்லறம் புரிவீர் !
நலமோங் குகவே, நலமோங்குகவே !

[எல்லாரும் தாலியை ஆசீர்வதித்தல்.]

## உ௫. தாலி கட்டுதல்

[தாலிகட்டல் தமிழர் வழக்கமே. அக்காலம் வீரத் தமிழன் தான் கொன்ற புலிப்பல்லைக் காதலிக்குத் தாலியாகக் கட்டினன். அதன்வடிவாகவே பொற்றலி செய்து இப்போது கட்டுகிறூர்கள். விரும்புவோர் இச் சடங்கு செய்க ; அல்லது மாலை, மோதிரம் மாற்றுக. அவை யும் தமிழர் வழக்கங்களேயாம்.]

மணமகன்

அக்கினி முன்பும், ஆன்ஞோர் முன்பும்,
வாழ்க்கைத் துணையாய் வரிக்கிறேன் இவளை.
மன மறிந்தே மணம்புரி கின்றேன்,
இல்லறத் தேரை இருவரும் இழுப்போம்.
பொன்னும் கலனும் பொருந்திய தொத்தோம்.
இரண்டு கண்ணும் இணைந்தது போன்ஞேம்.
இவளென் உலகம் இவளென் உடலம்,
அவள்நலம் என்நலம், அவள்துயர் என்துயர்,
அவளுயிர் என்னுயிர், அவள்மனம் எனதே;
அவளென் சக்தி நானவள் சிவமாம்.
என்றும் பிரியேன் ஒன்றி வாழ்வேன்.
அறம்பொரு ளின்பம் அறிவரு ளமைதி
பெருகியெம் வாழ்க்கை பேரின்ப மாகுக.
யோகமும் சுத்த போகமும் ஆகுக.
என்று கடவுளை ஏத்துவன் யானே!

மணமகள்

மாண்பு மிக்க மணாள ருடனே
மனம் பொருந்தி வாழ்வதென் கடமை.
இவரே எனக்குயிர், இவரென் வாழ்க்கை.
இவருடை யின்பமே என்னுடை யின்பமாம்.
இவர்படுந் துயரம் யான்படுந் துயராம்.
உரிய மணாளன், உள்ளமென் வீடாம்.
ஈருட லேனும் ஒருயி ராஞேம்.
வடமீன் போலத் திடமன துடனே
பிரியா திவருடன் பிரியமாய் வாழ்வேன்.
அக்கினி சாட்சி ஆன்ஞோர் சாட்சி
எனையிவர்க் கீந்தேன் இறைவன் அருள்கவே!

## உச. இன்பப் பாட்டு

(மாலை மாற்றும்போது பாடுக)

இன்ப மின்ப மின்ப மோங்கவே — காதல்
இருவருக்கும் இன்ப மோங்கவே
அன்பும் அறமும் பொருளும் பெருகவே — சக்தி
ஆண்டவன் அருள் புரிகவே!
வெற்றி வெற்றி வெற்றி யோங்கவே
வீறுபெற்ற தீர ராகவே
பெற்றுப்பெருகி நீடு வாழ்கவே — எம்மைப்
பேணுந்தெய்வம் அருள் புரிகவே!

## உரு. பெரியார் வாழ்த்து

நீடுவா ழியரோ நீடுவா ழியரோ!
பீடுறு நம்பியும் பெட்புறு நங்கையும்,
கண்ணிரண் டென்னக் கருத்துறக் கலந்து
புண்ணிய போகமும் யோகமும் பொலிய
அன்பும் அறமும் அருளும் பெருகி,
பண்பும் பயனும் பழுத்தினி தோங்கி,
தங்கப் புதல்வர் தாலாட் டொலிக்க
மங்கல மாக வாழ்க
நங்குலத் தமிழர் நாளும் பெருகவே!

உள்ளமே தில்லையாக உயிர்தொறு நடனஞ் செய்யும்
வள்ளலின் கருணையாலே, வளமையும் இளமை யின்பும்
தெள்ளறி வாற்றல் யாவுந் திருவுடன் பெருகிநாளும்
வள்ளியு முருகனும்போல் வதுவரர் வாழ்க மாதோ!

## உசு. ஆலத்தி

பொலிக பொலிக பொலிக பொலிகவே
பொங்கு மின்பம் எங்கும் பொலிகவே!
நலிக நலிக தீதும் அச்சமும்
நலங்கள் யாவும் துலங்கி மல்கவே!
பொழிக பொழிக பூரணக் கதிர்
போக யோக சக்தி யோங்கவே!
அழிக துன்பம் அவனி வாழ்விலே
அமர கங்கை யருவி பாய்கவே!

## உஎ. ஜய முரசம்

இருளொழிக்கும் இரவி யெழுகவே
இடரொழிக்கும் இன்பம் பல்கவே!
அருள்சுரக்கும் சுரபி வாழ்கவே! - எங்கும்
ஆத்ம ஞானம் பூத்தொளிர்கவே!
பொருள்செழித்து வாழ்க பூமகள்! - மிகப்
பொன்செழித்து வாழ்க நன்மனே - தெய்வத்
திருசெழித்து வாழ்க தீரரே - அன்பர்
ஜெயமுரசம் கொட்டிமுன் செல்வோம்!

[இத்துடன் முகூர்த்தச் சடங்கு முடியும் - இனி மாலை ஆடல்கள்]

## உஅ. தூது

பைரவி ராகம்] பல்லவி [ரூபக தாளம்

தூது கொண்டு செல்வாய்—அன்னமே
தூது கொண்டு சொல்வாய் (தூது)

அநுபல்லவி

காத லரும்புங் கனிநகை வீசி
வேதனை செய்ப்ராண நாதனிட மிப்போ (தூது)

சரணம்

எட்டிப் பிடித்திடென் றென்முன் வருவான் ;
ஏமாற்றிப் பின்னல் இழுத்து மறைவான் ;
கட்டிப் பிடித்தொரு முத்த மிடுவான்....
கண்கொண்டு பார்த்தாலோ காற்றெனப் போவான் (தூது)

தொட்டபின் என்னைக்கை விட்டிட லாமோ ?
தோழருக் குள்ளிந்தச் சோதனை யாமோ ?
சட்டந் தெரிந்த தரும துரைக்குச்
சத்தியம் இல்லையோ? பத்தினி தொல்லையோ? (தூது)

நாடும் நகரும் நகைக்குதே தோழீ....
நாணம் இழந்தது ; நான் இனி வாழேன்.
வீடும் உறவும் விரிச்செனப் போச்சுதென்
வேட்கை விழலுக் கிறைத்தநீ ராச்சே ! (தூது)

உண்ண வுறங்க வுடுக்க மறந்தேன் ;
ஊர்ப்பழி யச்சமும் ஒக்கத் துறந்தேன் ;
கண்ணுங் கருத்துங் கலங்கவோர் மாலை,
கள்ளன்வந்தென் னுள்ளங் கொள்ளை கொண்டாண்டி (தூது)

சோலைக் குயிலுடன் சொல்லித் தவிப்பேன்.
ஜோடிக் கிளிக்கவன் மோடி யுரைப்பேன்
மாலை வசந்த மலரைப் பழிப்பேன்.
மங்கல யாழால் அவனை யழைப்பேன்.... (தூது)

கூர்கணை போல் என்னை குத்துது தென்றல் ;
கொங்கையில் முத்தெனக் கொட்டுது கண்ணீர்
ஆர்வத்தைச் சொல்லிப்பின் அன்பனுடனே
அழகாய்த் தவழ்ந்தென் அருகே வருவாய். (தூது)

---

காதலன் - பரமாத்மா. காதலி - ஜீவாத்மா. அன்னம் - சுத்த மனம்.

## உக. நலங்குப் பாட்டு

வாரும் வாரும் வாரும் கண்ணு
வாரும் நலங்கிட
தாரும் தாரும் தயவு செய்து
தாமரைக் கரம்! (வாரும்)

கூவி யும்மை எனது நெஞ்சக்
குயில் அழைக்குதே.
தாவி ஆசை வெள்ளம் உம்மைத்
தழுவிக் கெஞ்சுதே! (வாரும்)

இன்ப மான தென்ற லும்மை
எதி ரழைக்குதே
அன்பு மயிலும் குயிலும் கூடி
ஆடிப் பாடுதே. (வாரும்)

செங்குழம்பு தீட்டு கின்றேன்
செங்கை கால்களில்
தங்கம் போலே கந்தந் தூவித்
தடவிக் கொடுக்கிறேன். (வாரும்)

வாரி வாரிப் பூசு கின்றேன்
வாசச் சந்தனம்.
பூரித் துள்ளம் பொங்கப் புதிய
பூ முடிக்கிறேன். (வாரும்)

அத்தர் பன்னீர் ஆனந்த மாய்
அள்ளித் தெளிக்கிறேன்
சுத்த மாக வீணை மீட்டிச்
சுக மளிக்கிறேன். (வாரும்)

கண்டு கண்டுங் கட்ட ழகைக்
கண்குளிர் கின்றேன்
செண்டு கட்டி யாடி டுவோம்
சிந்தை மகிழவே! (வாரும்)

## ௩௦. பூலாச்செண்டு

வண்டுலாவும் வாசமுல்லைச்
செண்டுகட்டி யாடுவோம்
அண்டர்நாதன் அற்புதத்தை
ஆனந்தமாய்ப் பாடியே! (வண்டு)
அந்தரச் சுடர்களால்
அதிசயச் செண்டாடிடும்
சுந்தரேச சக்திநாமம்
சொல்லிப்பந் தடிப்பமே! (வண்டு)
வந்துவந்து சொல்லுகின்றன
வாழ்க்கைமின்ன லென்னவே
உந்திஉந்திக் கைகளை
உயரப்பந் தடிப்பமே! (வண்டு)
வெற்றிவேல் முருகனை
விரும்பி யன்புமேவியே
எற்றிநம் கவலையை
எறிந்துபந் தடிப்பமே! (வண்டு)
பாம்பின்மேல் நடம்புரிந்த
பங்கயத் திருவடி
தாங்கிநம் உளத்திலே
தணிந்துபந் தடிப்பமே! (வண்டு)
கண்ணன்அன்பை எண்ணிஎண்ணிக்
காதலால் உருகியே,
விண்ணளாவத் தாவிவேக
மாகப்பந் தடிப்பமே! (வண்டு)
அம்பலத்தில் ஆடுகின்ற
அப்பன் பாதப்போதினை
நம்பிநம்பி நம்வினை
நலியப்பந் தடிப்பமே! (வண்டு)
நாமெனும் அகந்தையின்றி
நாட்டமூன்றி நெஞ்சிலே,
ஓம்நமச்சி வாயஓமென்
றேங்கிப்பந் தடிப்பமே! (வண்டு)

## ௩௧. மலர் கொய்தல்

செஞ்சுருட்டி ராகம்] [ஆதி தாளம்

மதுமலர் கொய்திடுவோம் தோழிமாரே
வாழ்க்கை வனத்தினிலே தோழிமாரே
புதுமலர்த் தென்றலுடன் தோழிமாரே
பூங்குழல் கேட்குதம்மா தோழிமாரே! (மது)

வண்டுக ளுடன் சென்றே தோழிமாரே
வாசமலர் பறிப்போம் தோழிமாரே
தொண்டர் துணைவனுக்குத் தோழிமாரே—மாலை
தொடுத்துத் தொடுத்தணிவோம் தோழிமாரே! ()

காதல் வனத்தினிலே தோழிமாரே
கண்ணன் ஒளிந்திருப்பான் தோழிமாரே
மாதவி மலர்களால் தோழிமாரே—அவன்
மார்பை அலங்கரிப்போம் தோழிமாரே! (மது)

முத்தமிழ்ச் சோலையிலே தோழிமாரே—வேல்
முருகன் உலாவுகின்றான் தோழிமாரே
கொத்துக்கொத் தாய்க்கடம்ப மலர்கொடுத்தே
குமரன் அருள்பெறுவோம் தோழிமாரே! (மது)

மல்லிகை சண்பகம்துளசி ரோஜா
மாதவ னுக்கணிவோம் தோழிமாரே
வில்வம் செவ்வந்தி தும்பை கொன்றைமாலை
விசுவமூர்த்திக் கணிவோம் தோழிமாரே! (மது)

அறிவான பரமனைத் தோழிமாரே
அன்புமலர் சொரிந்தே அடிபணிவோம்
விரிவான உலகெல்லாம் தோழிமாரே—அருள்
விளையாடும் வனமென்போம் தோழிமாரே! ()

## ௩௨. கண்ணூஞ்சல்

தேனூகிச் சித்தாந்தத் தெளிவதாகி
திருத்தொண்டர் துணையான தெய்வமாகி
தானூகித் தன்மயமே எவையுமாகி
சக்தியுடன் சிவபெருமான் ஆடிரூஞ்சல்! (தே)
வானூகி வளியாகி ஒளியுமாகி
வாழுயிருக் குயிராகி, வளமையாகி
ஆனந்த நடனசபா பதியுமாகி
அமிர்தவல்லி யோடுசிவன் ஆடிரூஞ்சல்! (தே)
அன்புறுதி யென்கின்ற கால்கள் நாட்டி
ஆர்வமெனும் சங்கிலிகள் அமைப்பூட்டி
இன்பமிகு தியானமெனும் பலகைநீட்டி
இதயேசன் என்னுடனே ஆடிரூஞ்சல்! (தே)
பெண்ணூகி ஆணூகிப் பிரபஞ்சமாகி
பேசரிய துரியபர பிரமமாகி
கண்ணூகிக் கதிராகிக் காட்சியாகிக்
கதியாகும் அருட்சோதி ஆடிரூஞ்சல்! (தே)
அன்பான காதலர்கள் அகமகிழ்ந்தே
அறம்பொரு ளூநிரம்பிவளர் அழகுவாழ்வில்
இன்பான வரங்களெல்லாம் இலகநாளும்
இறைவனரு ளிறைவியுடன் ஆடிரூஞ்சல்! ()
ஓங்காரக் குழலுடனே உருகவீணை
ஓம்சுத்த சக்தியென்றே உள்ளந்துள்ள
நீங்காத நிஷ்டையிலே நிலைபெற்றோங்கி
நிறைவான பேரின்பம் ஆடிரூஞ்சல்! (தே)
எத்திக்கும் அருளாட்சி இலகிவாழ்க!
எந்தாயின் இசையோங்கி என்றும்வாழ்க!
தித்திக்கும் செந்தமிழின் சீர்த்திவாழ்க!
திருவுடனே அருணேசன் ஆடிரூஞ்சல்! (தே)
பக்தசிகா மணிகள்செய்யும் பணிகள்வாழ்க!
பரிசுத்த சன்மார்க்கம் பரந்துவாழ்க!
சித்தியமாம் பேரன்பு நிலயம்வாழ்க!
நீடூழி சக்திசிவன் ஆடிரூஞ்சல்....! (தே)

## ௫௫. கப்பற் பாட்டு

புன்னாகவராளி ராகம்] பல்லவி [ஜம்பை தாளம்

ஏலேலோ பரம்பொருளே....
எல்லார்க்கும் சுகமருளே!

அநுபல்லவி

பால்போலே பொங்குதிரை—அதில்
பாய்ந்துவிளை யாடுகின்ற
சேல்போலே சுறுசுறுப்பாய்—அண்ணே
சேர்ந்துபட கோட்டிடுவோம்!
காலவெள்ளங் குமுறுதடா—நல்ல
காற்றடிக்கும் காலையிலே
வேல்முருகன் துணையெனவே—அண்ணே
வெற்றிபெறத் துடுப்பெடுப்போம்! (ஏலேலோ)

சரணங்கள் (துரிதம்)

முன்னாளில் ஐங்கடலை முற்றவும் அளந்தே,
முத்துமணி தங்கமலை மொய்த்துவரு கப்பல்
பன்னாளும் பாரெலாங் கடலரசி யென்றே
பண்பெற் றிலங்கிய பழந்தமிழ்க் கப்பல்
எந்நாளும் அழியாமல் இசைபெற்ற புலவர்
எரிதவக் காந்தவொளி யேறுமா வீரர்
பொன்னாளும் செல்வர் பல போராளும் வீரர்
புவியாளும் வேந்தர்பலர் போந்த தமிழ்க் கப்பல்!
(ஏலேலோ)

சிவசக்தி குமரிமுனை தவசக்தி பரவ
திருமால் வடக்கே திருக்கருணை செய்ய
நவசக்தி முத்துநகை நல்லழகு வீச
நானு மதங்களொரு ஞானமொழி பேச
கவிகளுங் கலைஞருங் கடவுளடி யாரும்
கைத்தொழிற் செல்வருங் காராளர் தாமும்,
புவியெலாந் தொழுதேத்தும் புண்ணியரும் போற்றப்
பொலிவிஜயக் கொடியேந்திப் போகுதடா கப்பல்!
(ஏலேலோ)

மங்கலக் கீதமொடு மனைமாதர் வாழ்த்த
மத்தளம் பல்லியந் தத்திமி துவைக்க
தங்கக் குழல்கோட்டு ஜலதரங் கம்யாழ்
ஸப்தஸ் வரங்கள் கிணீரெனப் பாட
தங்கச் சிலம்புகள் ஜலீரென்ன வீசித்
தளிரிளம் பூலோக ரம்பையர்கள் ஆட
துங்கமிகு யோகமுனி வோர்கள் மறையோத
சுரநாத வெள்ளத்திற் சொக்குதடா கப்பல்!
(ஏலேலோ)

சாதிமத வேற்றுமைச் சச்சரவில் லாமல்
சத்தியமே வெற்றியெனத் தள்ளுடா தள்ளு!
சோதனைசெய் வேதனைகள் சேதமிழை யாமல்
சுத்தமன மூன்றிநீ துணிவுடனே தள்ளு!
நீதிதரு மத்துடுப் பூன்றிநீ தள்ளு!
நேரான வழிபார்த்துச் சீராகத் தள்ளு....!
ஆதிபர மேசனருட் சோதியினை நோக்கி
அன்பார்ந்த தோழருடன் பண்பாகத் தள்ளு!
(ஏலேலோ)

பயனுள்ள பழமையொடு நயனுள்ள புதுமை
பண்புள்ள வுண்மையொடு நண்புள்ள பொதுமை
தயவுள்ள நெஞ்சமொடுந் தாராள வீரம்
தவயோக மிடையறுப் புவியோக வாழ்வு
பயமடிமை வறுமையிருள் பகைசிறுமை யற்ற
பந்தமறு சமரஸ சுதந்தரா னந்தம்
சுயமான வுள்ளறிவுச் சுடரோங்குந் தெய்வத்
துறையினைத் தொட்டதடா தூயதமிழ்க் கப்பல்!
(ஏலேலோ)

## ௩௪. கும்மி

பொங்குது தேன்வளம், பொங்குது பால்வளம்,
பொங்குது வான்வளம் பூமியெல்லாம்
மங்கள சக்தி மஹேஸ்வர னைப்பாடி
மகிழ்ந்து கும்மி யடித்திடுவோம்! (பொ)

சோலைக் குயில்நம்மைக் கூவுதம்மா—கன்று
துள்ளித் துள்ளிவிளை யாடுதம்மா!
காலை மணக்காற்று தாவுதம்மா—அன்னம்
கமலப் பொய்கையில் மேவுதம்மா! (பொ)

எங்கும் பசுமையும் பொன்னும் குலுங்கிடும்
இயற்கை யின்பத்தைப் பாருமம்மா!
அங்கிசை பாடிடும் அருவி வெள்ளத்தில்
ஆனந்த நீராட வாருமம்மா! (பொ)

எட்டெட்டுத் திக்கிலும் எல்லா வுயிரிலும்
ஏகமாய் நம்முயிர் காணுவமே
கட்டின்றிக் காவல்கள் யாவையு மின்றிநாம்
காட்டுக் கிளிவாழ்வைப் பூணுவமே! (பொ)

சாதி மதபேதச் சண்டைகள் யாவையும்
சத்தியத் திற்கு விரோதமம்மா !
சோதி சமரச சன்மார்க்க வீதியிற்
சுத்த சுதந்தரம் காணுமம்மா ! (பொ)

சாட்சியாய் நின்றிச் சகத்தை நடத்திடும்
சந்திர சூரியர் தங்கிலைபோல்
காட்சியாய்க் கண்டு கலங்கா மனங்கொண்டு
களித்து வாழுவோம் தோழிகளா ! (பொ)

அன்னைதன் பிள்ளையைக் கொஞ்சுகின்றாள்—அதே
அன்பை வளருங்கள் நெஞ்சினிலே !
தன்னை வழங்கிடுந் தண்முகில் போலெல்லாம்
தந்து நலஞ்செய்ய முந்துவமே ! (பொ)

சொல்லும் செயலும் பொருந்தக் கற்போம்—அந்தச்
சூரியச் சோதியும் வெப்பமும்போல்
அல்லும் பகலும் புகலளிக்கும் சிவன்
அருளிற் கூடிக்கு ழைந்துநிற்போம் ! (பொ)

## ௫௫. வளம் பொங்குக !

பொங்குக பொங்குகவே—வளம்
பொங்குக மங்கலமே
எங்குமே பூவும் கனியும் பசுமையும்
இன்புறப் பொங்குகவே ! (பொ)
ஒற்றுமை யோங்குகவே—மாந்தர்
உள்ளம் மகிழுகவே
பற்றலர் தீமையும் போரும் பொறாமையும்
பட்டென் றொழியுகவே ! (பொ)
கரும்பைச் சுவைத்திடுவோம்—ஞானக்
கற்கண்டை யுண்டிடுவோம் !
விரும்பியெல் லாரு நெருங்கி யமர்ந்தின்று
விண்விளக் கைத்தொழுவோம் ! (பொ)

பெண்ணை வணங்கிடுவோம்—பராசக்தி
பேரை முழங்கிடுவோம்!
கண்மணிச் செல்வர் கனியிளங் கன்னத்திற்
கண்ணனைக் கொஞ்சிடுவோம்! (பொ)

அன்பை வளர்த்திடுவோம்—நெஞ்சில்
ஆர்வம் வளர்த்திடுவோம்!
இன்ப உணர்வினால் இன்னலை வென்றருள்
ஈகை வளர்த்திடுவோம்! (பொ)

வீசெழில் ஆண்மையிலே—ரகு
வீரன் விளங்குகவே!
தேசுறுங் கல்வியும் இல்லறச் செல்வமும்
சேர்ந்து துலங்குகவே! (பொ)

மங்கி யறைந்தொழிக—கொடிய
வறுமை மடமையிருள்!
செங்கதிர்ச் சோதி செகமெங்கு நித்திய
சேமம் பரப்புகவே! (பொ)

ஆருயிர் வாழ்வினிலே—உண்மை
அன்புச் சுடர்விரிக!
பாருயர் நல்லறஞ் சீருயர்ந் தோங்கிப்
படர்கள் விலகுகவே! (பொ)

வேதநெறி தழைக்க—வினை
வேள்வி யெங்கும் செழிக்க....
பூதல வாழ்விற் புதுநல மோங்கிப்
பொலிக திருவருளே! (பொ)

வாழ்க வுயிர்க்குலமே—நாடு
வாழ்க ஜெயம்பெருகி
வாழ்க வுலகெல்லாம் வானம் வழங்குக
வாழ்க பரஞ்சுடரே! (பொ)

## ௩௰. க்ருஹலக்ஷ்மி வாழ்த்து

(பெண்ணை மணமகன் வீட்டில் வரவேற்றுப் பாடுக)

கல்யாணி ராகம்] பல்லவி [ரூபக தாளம்

வாழிய க்ருஹ லக்ஷ்மி வாழ்கவே
ஜய ஜய ஜய ஜய ஜய ஜய (வாழிய)

அனுபல்லவி

ஆழிசூழ் உலக மெல்லாம்
அமர வாழ்க்கை பொலிக!
வீழ்க தீமை! நன்மை யோங்க!
வேத கானம் முழங்க!—சுப
வேத கானம் முழங்க!—கர்ம
வேள்வி யெங்குந் துலங்க! (வாழிய)

இன்ப மான இல்ல றத்தில்
இருவர் இதயம் ஒன்றி—
அன்பும் அறமும், கற்புக் கனலும்
அறிவும் திருவும் பெருக
அறிவும் திருவும் பெருக—நிதம்
ஆத்ம சக்தி வளர்க! (வாழிய)

குவலய மெல்லாம் சிவனும் சக்தியும்
குலவுங் குடும்ப மென்போம்
தவமும் தொண்டும் ஸம ரஸமும்
தழைக்கச் சேர்ந்து வாழ்வோம்!
தழைக்கச் சேர்ந்து வாழ்வோம்—தெய்வ
சங்கமாக வாழ்வோம்! (வாழிய)

கரும ஞான பக்தி யோகங்
கலந்து பொலிய வாழ்வில்
தரும வீரந் துலங்கப் பெண்ணைச்
சக்தி என்று பணிவோம்—பெண்ணைச்
சக்தி யென்று பணிவோம்—பரா
சக்தி யென்று பணிவோம்—ஜய
சக்தி யென்று பணிவோம்! (வாழிய)

ஓம் சுத்த சக்தி

